டிய தொழிலொன்று: யஜமானனுக்கு வம்புப் பேச்சுக்கு ஆள் அகப்படாத பொழுது குமாஸ்தா அவருக்குப் பேச்சுக்கொடுத்துக் கொண்டே தன் எழுத்து வேலையையும் கவனித்துக் கொள்ள வேண்டியது. அப்பொழுது அவர் "அதோபார்! வெள்ளைக்காக்கை!" என்றால், "ஆம் உரலைத் தூக்கிக்கொண்டு பறக்கிறது!" என்று பதில் சொல்லவேண்டும்.

நல்ல யஜமானனுக்கு அடையாளமென்னவென்றால்: காலை 6 மணிக்கு வேலை செய்ய வந்த குமாஸ்தாவைப் பத்துமணி அடித்தவுடன் சாப்பிட அனுப்ப வேண்டியது. மத்தியானம் இரண்டாந்தரத்துக்குத் தான் சாப்பிட்டு மிகுந்ததை குமாஸ்தாவுக்குக் கொடுக்க வேண்டியது. தீபாவளிக்குக் குமாஸ்தாவுக்கு ஒரு வேஷ்டி வாங்கிக்கொடுக்க வேண்டியது. சவுகரியப்பட்டால் குமாஸ்தாவின் மனைவிக்கு ஒரு புடவையாவது அல்லது ரவிக்கைத் துண்டாவது வாங்கிக்கொடுப்பது மிக்க தயாளகுணமுள்ள யஜமானனுக் கடையாளம். யஜமானன் வீட்டில் சுபாசுப விசேஷங்கள் நடந்தால் குமாஸ்தா வீட்டில் அடுப்பு மூட்டக்கூடாதென்றுத்தரவளித்து அவனை உக்கிராணக் காவலில் வைத்து அவன் மனைவியை யஜமானன் மனைவிக்கு வீட்டுக் காரியங்களில் ஒத்தாசை செய்யச் சொல்ல வேண்டியது. வேலை தெரியாத முட்டாள் குமாஸ்தாவை "இவன் வேலையில் கெட்டிக்காரன்" என்று சிபார்சு செய்து தன்னிடமிருந்து அவனை நீக்கி உயர்ந்த உத்தியோகத்துக் கனுப்பிவிட வேண்டியது. வேலை தெரிந்த குமாஸ்தாவை "உன்னைப்பற்றிப் பெரிய உத்தியோகஸ்தர்களிடம் சிபார்சு செய்திருக்கிறேன்" என்று அவனைப்பேச்சினால் உத்ஸாகப்படுத்தித் தன்னை விட்டு அனுப்பாமலே வைத்துக்கொள்ள வேண்டியது. அவனுடைய யோக்கியதையை அறிந்த பெரிய உத்தியோகஸ்தர்கள் அவனை உயர்ந்த சம்பளத்துக்குத் தங்களிடம் அனுப்பும்படி கேட்டுக் கொண்டால் 'இந்த சமயம் அவனை அனுப்பிவிட்டால் என் கச்சேரி வேலை ஊழலாய்ப் போய்விடு'' மென்று மறுத்துவிட வேண்டியது. யஜமானன் அயலூர்களில் உத்தியோக சம்பந்தமாய் சஞ்சரிக்க வேண்டிவரும் பொழுது குமாஸ்தாவைத் தன்னுடன் கூட அழைத்துக்கொண்டு காலை மாலை உலாவி வரவேண்டியது; தன்னோடு கூடவே சாப்பிடச் சொல்ல வேண்டியது.

உத்தியோகம் என்பது ஒரு பெரிய ஏலச்சீட்டு வியாபாரம். புத்தியுள்ள சில பேராசைக்காரர்கள் புத்தி யில்லாத பல பேராசைக்காரர்களைக் கூப்பிட்டு "நீங்கள் தலைக்குக் கொஞ்சம் அவல் (பணம், உழைப்பு) கொண்டு வாருங்கள், நாங்கள் உமி (காகிதம், பேனா, மைக்கூடு, மேஜை, நாற்காலி பங்கா) கொண்டுவருகிறோம்; இரண்டையும் கலந்து ஊதி ஊதித் தின்போம்: அதாவது நாங்கள் உங்களுக்குப் பங்கிடுவதற்காக எடுத்துக்கொண்ட கூலிபோக மிகுந்ததை, பொறுக்கி யெடுத்த (எங்கள் அபிப்பிராயத்தில்) யோக்கியதையுள்ள இரண்டு மூன்று பேர்களுக்கு பாதிக்கு மேற்பட்ட பங்கைக் கொடுத்து விட்டு, மற்றப்பாதியை அவ்வித யோக்கியதை யுள்ளவர்களாகக் காணப்படாத அதாவது அவ்வளவு அதிர்ஷ்டமில்லாத ஆயிரக் கணக்கான வாயில்லா வகையறியாக் கூட்டங்களுக்குக் கொடுப்போம். இதில் தான் அவரவர்கள் அதிர்ஷடம் வெளியாகப்போகிறது!" என்கிறார்கள். அதிர்ஷ்டம் முன்னமேயே வெளியாகி விட்டதே! இரண்டு மூன்று பேர்களுக்குத்தான் அதிர்ஷ்ட மென்றால், மற்றவர்கள் அதிர்ஷ்டம் வெட்ட வெளிச்சமன்றோ! ஆனால் ஒவ்வொருவனும் நினைப்பதென்ன வெனில் "நான் என் அந்த இரண்டு மூன்று பேர்களில் ஒருவனாயிருக்கக் கூடாது!"

"நீ இருந்துவிட்டால் மற்றவர்கள் கதி என்ன?"

"அதைப்பற்றி எனக்கென்ன கவலே?"

"இதில்தான் உன்னுடைய மடமை ஏற்படு கிறது—அந்த மற்றவர்களில் நீ ஒருவனுயிருந் துவிட்டாலோ? அப்படியும் இருக்கக்கூடியது தானே, அப்பொழுது எனக்கென்னவென்று சொல்வாயா?"

"அதைப்பற்றி யோசித்தால் அப்புறம் அதி ல் அதிர்ஷ்டமென்ன இருக்கிறது?"

"கெடுதியையே எதிர்பார்க்க வேண்டுமெ ன்று நான் சொல்லவில்லே. நடக்கக்கூடிய நன் மை கெடுதி இரண்டு விஷயங்களில் நன்மையை யே நம்பிக்கொண்டிராமல் இரண்டையும்பற்றி யோசிக்கவேண்டியதுதான்—என்பதே"

கடைசியில் கடை யாருடையதென்றால் உமி கொண்டு வந்தவனுடையது. இந்த வியாபாரத் துக்கு இரண்டு முதல் தேவை—பங்கிட்டுக்கொ டுப்பவனுடைய புத்திகூர்மை, பங்கு கொண்டு வருபவர்களுடைய புத்தியின்மை. அவரவர் பங்கு அவரவரிடத்தில் இருப்பதில் அவர்களு க்கே திருப்தியில்லே. ஆயிரம் பேர்களிடமிரு ந்து பிடுங்கி இரண்டு மூன்று பேர்களுக்குக் கொடுக்கத் தாங்களே உடந்தையாயிருக்கிறுர் கள். பிடுங்கிக்கொடுக்கிறவன் பிழைக்கிறுன்.

"புத்திமான் புலவான்" என்பது எங்கும் உண்மை. பிச்சையில் அதிகாரப்பிச்சை என்ப துபோல், கூலி வேலேயில் அதிகாரக்கூலியுமு ண்டு. யஜமானன் வேலேக்காரன் என்கிற இர ண்டுபேர்களில், எவன் பலவானே (அதாவது) புத்திமானே அவன் யதார்த்தத்தில் (அனுபவ ரீதியாய்,) யஜமானனுயிருக்கிறுன்; யஜமானன் என்கிற பெயர் யாருக்கிருந்தபோதிலும் சரி— வேலே செய்கிறவன் வேலே வாங்குகிறவன் என்கிற இரண்டு பேர்களில் யார் பலவானே அவன் வாக்குச்செல்லுகிறது. வேலேசெய்கிற வன் பலவானுயிருந்தால், நான் இவ்வளவுவேலே இவ்வளவு கூலிக்கு இந்தமாதிரி இந்த காலத் தில்தான் செய்வேன் என்றுல், அந்தப்பேச் சுக்கு வேலே வாங்குகிறவன் உடன்படவேண்டி யிருக்கிறது. வேலே வாங்குகிறவன் பலவானு யிருந்தால், நீ இவ்வளவுவேலே இவ்வளவு கூலிக் கு இந்தமாதிரி இந்தக்காலத்தில் செய்யவேண் டியது என்றுல் வேலேசெய்கிறவன் அதற்கு உடன்படவேண்டி யிருக்கிறது.

உதாரணமாக,—ரெயில்வண்டிக் காரர்களே எடுத்துக்கொள்வோம்; அவர்களுடைய கூலி ஆட்கள், சிப்பந்திகளே உத்தேசித்து அவர்கள் யஜமானர்களாகிறுர்கள். பிரயாணிகளே உத் தேசித்து அவர்கள் வேலேக்காரர்களாகிறுர்கள். ஆனல் இவ்விரண்டு பேர்களிடத்திலும் அவர் கள் வாக்குத்தான் செல்லுகிறது; அதாவது அவர்கள்தாம் யதார்த்தத்தில் (அனுபவரீதி யாய்) யஜமானர்களா யிருக்கிறுர்கள். தங்கள் சிப்பந்திகளே இந்தவேலே இந்தநேரத்தில் இந்த மாதிரிதான் செய்யவேண்டும்; அதற்கு இந்த சம்பளம்தான் கொடுப்போம் என்கிறுர்கள். சிப்பந்திகளும் அதற்கு உட்பட்டு நடக்கிறுர் கள். பிரயாணிகளே இந்த நேரத்துக்குஇந்தக் கொட்டகையில் இந்தக் கதவுக்குள்ளால் நுழை ந்து இந்த ஜன்னலுக்குள்ளால் பறந்து இந்த முகமாகத் திரும்பிக்கொண்டு சீட்டு வாங்கி வாங்கின இத்தனை நிமிஷநேரத்துக் குள்ளாக வண்டியில் ஏறி, ஏற இடமில்லாவிட்டால் மூட் டைகளோடு மூட்டைகளாய் அடைக்கப்பட்டு வண்டிக்கு இத்தனை பேர்களுக்குக் குறையாமல் உட்கார்ந்து கொண்டு (கூடுமானல்) ஊர்போய்ச் சேரவேண்டியது. இல்லாவிட்டால் வழியில் சாகவேண்டியது என்கிறுர்கள். பிரயாணிகள் அதற்கு உடன்பட்டுச் செல்லுகிறுர்கள். இதற் கெல்லாம் உடன்பட்ட பிரயாணிகள் ரயில்வண் டியை விட்டிறங்கினதும் ஜட்கா வண்டிக்காரன் நாலணு கேட்டால் ஒன்றேகாலணுவுக்குச் சம் மதமா என்று அவனிடத்தில் தங்கள் யஜமான அதிகாரத்தைக் காட்டுகிறுர்கள். அவரவர்கள் அனுபவத்தில் இம்மாதிரி இன்னும் எவ்வள வோ உதாரணங்கள் கண்டு கொள்ளலாம்.

இப்படிப்பட்ட உத்தியோகத்தில் நானும் முப்பது வருஷத்துக்கு மேற் காலங்கழித்தாகி விட்டதென்றால் அதில் எவ்வளவு சுகப்பட்டிருப்பேன் என்று சொல்லாமலே அறிந்து கொள்ளலாம். ஆனால் வக்கீல் உத்தியோகத்தில் இம்மாதிரி கஷ்டங்களில்லை என்பது சிலர் அபிப்பிராயம். என் தம்பியும் அப்படி உத்தேசித்தே அடிக்கடி என்னைச் சின்ன வக்கீல் பரீக்ஷைக்குப் படிக்கச்சொல்லிப் புத்திசொல்லியிருக்கிறான். ஆனால் அவன் சென்னப்பட்டணத்தில் வீட்டு வாசலில் தன் பெயர் வெட்டிய விளம்பரப் பலகையைத் தொங்கவிட்டு அதன் பின்புறத்தில் தாழ்வாரத்தில் புதிய மேஜை நாற்காலி காகிதம் மைக்கூடு பேனா வெல்லாம் தயாராய்த் தீட்டி வைத்துக்கொண்டு தெருவில் போகிறவர்களையெல்லாம் (தலைமயிர் வளர்ந்திருக்கிறதா வென்று பார்ப்பது போல்) உற்றுப் பார்த்துக்கொண்டும், மாதம் 30 ரூபா வீட்டு வாடகை 10 ரூபா குமாஸ்தா சம்பளம் வருஷத்தில் 25 ரூபா வருமான வரி செலுத்திக் கொண்டும், ஊரிலிருந்து அரிசி, பருப்பு, புளி, மிளகாய் எல்லாவற்றையும்மாதம் தவறாமல் வரவழைத்துக்கொண்டும் இவன் சம்பாதிப்பதைப்பார்த்த எனக்கு அவன்புத்தி மதியை அங்கீகரிக்கத் தைரியம் வரவில்லை. இப்பொழுது எம். எல். பரீக்ஷைக்குப் பணம்கட்டியிருக்கிறான். முன்சீப் (கிராம முன்சீப் அல்ல) வேலைக்கு விண்ணப்பம் கொடுத்திருக்கிறான். ஹைகோர்ட்டார் இவன் பெயரைத் தாக்கல் செய்துகொண்டிருக்கிறதாக உத்தரவளித்திருக்கிறார்கள். எம். எல். பரீக்ஷை தேறினதும் முன்சீப் வேலை ஆகிவிடும்.

இருவருக்குள் வழக்குநேர்ந்து அதை அவர்களுக்குள்ளாகவே தீர்த்துக்கொள்ள முடியாவிட்டால் நியாயஸ்தலத்துக்குப் போகிறார்கள். இவர்கள் கக்ஷிகளில் உள்ள நியாயம் இவர்களுக்குத்தான் நன்றாய்த் தெரியும். ஆதலால் நியாயப்படி வழக்கைத் தீர்த்துக்கொள்ள இஷ்டமுள்ளவர்கள் கச்சேரிக்குப் போகாமலே தீர்த்துக்கொள்ளலாம். ஆனால் யாராவது ஒரு கக்ஷிக்காரர் அநியாயத்தில் பிரவேசித்தால் அப்பொழுது இரண்டு கக்ஷியிலும் உள்ள நியாயத்தை நியாயாதிபதிக்கு எடுத்துக் காண்பிப்பதற்கு வக்கீல்கள் ஏற்பட்டிருக்கிறார்கள். ஆதலால் ஒவ்வொரு வக்கீலும் தன் கக்ஷியில் இருக்கிற நியாயம் முழுவதையும் எடுத்துச்சொல்லி எதிர்க்கக்ஷியிலிருக்கிற நியாயம் முழுவதையும் எடுத்துச்சொல்லி எதிர்க்கக்ஷியில் இருக்கிற அநியாயத்தையும் அவசியமானால் எடுத்துச் சொல்லலாம். அதாவது வக்கீல்கள் தன் கக்ஷி ஜயிக்கவேண்டுமென்று சண்டை போடாமல் நியாயம் ஜயிக்கவேண்டும், சத்தியம் ஜயிக்கவேண்டும் என்றும் தன் கக்ஷியில் நியாயமிருந்தால் அதில் எவ்வளவு இருக்கிறதோ அவ்வளவுக்கு அது ஜயிக்கவேண்டும் என்றும் வழக்காடி நியாயம் தீர்ப்பதில் நியாயாதிபதிக்கு உதவிபுரியக் கடமைப்பட்டிருக்கிறார்கள். ஆனால் தன் கக்ஷியில் இல்லாத நியாயத்தை இருப்பதாகப் பேசவும் அநியாயக் கக்ஷியை ஜயிக்கச்செய்கிறேன் என்று பிடிவாதம் பிடிக்கவும், நான் காலினால் போடும் புனைசுருட்டு முடிச்சுகளை நீர் கையினால் அவிழ்த்துவிடும் பார்ப்போம் என்று நியாயாதிபதியைப் பந்தயத்துக் கழைக்கவும் அவர்கள் கடமைபட்டவர்களல்ல. இதனால் வக்கீல்கள் சர்க்காருக்குக் கடமைப்பட்ட சேவகர்களே யொழிய கக்ஷிக்காரர்களுக்குக் கடமைப்பட்டவர்க ளல்லவென்று ஏற்பட்டுவிடும். அப்பொழுது கக்ஷிக்காரர்கள் வக்கீல்களுக்குப் பணம் கொடுப்பார்களா வென்றால், கக்ஷிக்காரர்கள் கொடுப்பதற்குப்பதிலாக சர்க்காரே வக்கீல்களுக்கு மாதச்சம்பளமுங்கொடுத்து ஒவ்வொரு வழக்குக்கு இவ்வளவென்று பிரத்யேக சம்பளமுங்கொடுத்து நியாய விசாரணை செய்யவேண்டும். ஏனெனில் நியாயத்தைக் கண்டுபிடித்து நடத்துவது சர்க்கார்கடமை; அக்கடமையைத்

தீர்க்க ஏற்பட்ட நியாயாதிகாரிக்கு வக்கீல்கள் உதவி புரிவதால் வக்கீல்களும் சர்க்கார் சம்பளம் பெறவேண்டியவர்கள் என்று ஏற்படவில்லையா? அப்படி வக்கீல்கள் கக்ஷிக்காரர்களுக்குக் கட்டுப்பட்டவர்களல்லவென்றால் கக்ஷிக்காரர்கள் வக்கீல்களைத்தேடி வரமாட்டார்களே, வக்கீல்களுக்கு வழக்கும் வரும்படியுங் குறைந்து போமே என்றால், அப்படிப் போகவேண்டுமென்பதுதான் நம் கோறிக்கை. அப்பொழுதுதான் தேசத்துக்கு க்ஷேமம். அப்பொழுது அனாவசியமான வழக்குகளை யாரும் கொண்டுவரமாட்டார்கள். அனாவசியமாக யாரும் வக்கீல் வேலையில் புகுந்துகொண்டு ஊரை இரண்டு செய்து ஆட்டைத்தூக்கி மாட்டில் போட்டு மாட்டைத்தூக்கி ஆட்டில் போட்டுக்கொண்டு நாரதர்களாக விளங்கிக்கொண்டிருக்கமாட்டார்கள். இந்தஊருக்கு இவ்வளவு வக்கீல்கள் போதுமென்று சாக்கார் கட்டுப்பாடுசெய்யலாம். நியாயஸ்தலங்களின் தொகையும் நியாயாதிகாரிகளின் தொகையும் குறையும். இப்பொழுதோ ஊரில் சாவுண்டானால் சவந்தூக்கிகளுக்குப் பிழைப்பு என்பதுபோல், ஊரில்கலகமுண்டானால் வக்கீல்களுக்குப் பிழைப்பு. மற்றவர்கள் நெல்முதலிய தானியங்களைப் பயிரிடுவதுபோல வக்கீல்கள் கலகத்தைப் பயிரிடுகிறார்கள். கலகம் விளைந்தால் அது இன்னும் அதிகப்படியாக வக்கீல்களைப் பயிரிடுகிறது (அதாவது வக்கீல்களின் தொகை அதிகரிக்கிறது.) இப்படிக்கலகமும் வக்கீலும் (கீதையிற் சொல்லிபபடி) பரஸ்பரம் போஷிக்கப்பட்டு வளருகிறார்கள்.

வக்கீல்களுக்கு மற்ற உத்தியோகஸ்தர்களைக் காட்டிலும் ஸ்வதந்திரம் அதிகம்என்று சொல்லிக் கொள்ளுகிறார்கள். ஆனால் தன் கக்ஷி ஜயிக்கவேண்டுமென்கிற ஆவலினால் நியாயாதிகாரிகளின் ஸ்நேகத்தையும் தயவையும் வக்கீல்களும் சம்பாதிக்கவேண்டியிருக்கிறது. சில சமயம் குமாஸ்தாக்களுடைய தயவையும் தேடவேண்டியிருக்கிறது. அப்பொழுது மற்ற உத்தியோகஸ்தர்களுக்கும் வக்கீல்களுக்கும் உள்ளதாகச் சொல்லிக்கொள்ளும் ஸ்வதந்திரம் என்னும் வித்தியாசம் பறந்துபோய் விடுகிறது.

வக்கீல்களுக்கும் கக்ஷிக்காரர்களுக்கும் உள்ள ஸ்நேகம் ரயில்வண்டி ஸ்நேகம், தாசியின் ஸ்நேகம்போலத்தான். ஒருவரைவிட்டொருவர்பிரியும்போது "ஞாபகமிருக்கட்டும், அடிக்கடி கடிதம் போடுங்கள்" என்று ஒருவர் விலாஸத்தையொருவர் புஸ்தகத்தில் குறித்துக்கொள்வார்கள். அடுத்த தடவை பையில் பணமில்லாமலும் கையில் வகாலத்தில்லாமலும் ஒருவரையொருவர் சந்திக்க நேர்ந்தால் வேறு பக்கத்து சந்துவழியாய் நுழைந்து போய்விடுவார்கள். வழக்கிருந்த காலத்தில் வருந்தியுபசரித்து சாப்பாடு போடப்பெற்ற கக்ஷிக்காரன் மற்றொரு காலத்தில் வக்கீல் வீட்டுக்குவந்தால் "வக்கீல் ஊரிலில்லை" என்று திரும்பிவரவேண்டும். அல்லது சகக்ஷிக்காரனைக் கண்டு வக்கீல் "என்ன பிள்ளையவாள், இந்தமாதம் நமது குட்டிக்குக் கலியாணம் செய்ய யோசித்திருக்கிறேன். முந்தின வருஷம் நீங்கள் அனுப்பினதுவரை முதல்தரமானது. அம்மாதிரி இந்தத்தடவை அனுப்பினீர்களானால் பெரிய உபகாரமாயிருக்கும். விலை ஊரிலுள்ளதுபோல் போட்டுக்கொள்ளுங்கள்" என்றால், "இந்தத்தடவை துவரை வெகு யோசம். துளிர்காலத்தில் மாடுமேய்ந்துவிட்டது. பின்பு பூக்குங்காலத்தில் பூச்சி விழுந்துவிட்டது." என்று பதில் கிடைக்கும்.

(இன்னும் வரும்.)

ஒருதாலூகா குமாஸ்தா.

:o:

உ

ஓம் ஸ்ரீ சாவித்திரியை நம:

# விவேகசிந்தாமணி உபநிஷதர்த்த தீபிகை.

[விவேகசிந்தாமணிக்கென்று பிரத்தியேகமாக எழுதப்பட்டது].

## 11. பாவனோபநிஷத்.

(இரண்டாம் பாகம்.)

———:*:———

முதல் ஆவரணத்தின் பாவனை.

11. [உப] நியதி, சிருங்காரம் முதலான ரஸங்கள்,—இவை அணிமாதி (சித்திகள்). காமம், குரோதம், லோபம், மோஹம், மதம், மாத்ஸர்யம், புண்யம், பாவம்,—இவைகள் பிராஹ்மீ முதலான அஷ்டசக்திகள். (11)

(குறிப்பு):—இங்கு ஸ்ரீ சக்ரத்தின் சதுரசிரத்தில் முதல் ரேகையிலுள்ள அணிமா முதலான பத்து சக்திகளின் பாவனையும்; இரண்டாவது ரேகையிலுள்ள பிராஹ்மீ முதலான எட்டு சக்திகளின் பாவனையும் சொல்லப்பட்டது. நியதி யென்றால் பிராரப்த கர்மம். ரஸங்கள் ஒன்பது. அவையாவன:(1) சிருங்காரம், (2) பயாநகம், (3) ரௌத்ரம், (4) பீபத்ஸம், (5) ஹாஸ்யம், (6) வீரம், (7) கருணை, (8) அத்புதம், (9) சாந்தி என்பன. இவை பத்தும் (1) சர்வகாமசித்தி, (2) பிராப்திசித்தி, (3) இச்சாசித்தி, (4) புத்திசித்தி, (5) பிராகாம்ய சித்தி, (6) வசித்வசித்தி, (7) ஈசித்துவசித்தி, (8) மஹிமாசித்தி, (9) லகிமாசித்தி, (10) அணிமாசித்தி முதலான பத்து சித்திகளுக்கும் பாவனையாகும். இவை சதுரசிரத்தின்வெளிக்கோட்டிலிருப்பன.—இப் பாவனையின் கிரமத்திற்கு 'பிந்துசூத்திரம்' பிரமாணமாகும்.

இரண்டாம் ரேகையிலுள்ள (1) பிராஹ்மீ, (2) மாஹேசுவரி, (3) கௌமாரீ, (4) வைஷ்ணவீ (5) வாராஹீ, (6) மாஹேந்திரி, (7) சாமுண்டீ, (8) மஹாலக்ஷ்மீ என்கிற எட்டு சக்திகளையும் காமம் முதலிய ஷடூர்மிகள், புண்யம், பாபம் என்னும் இவ்வெட்டுகளுக்கும் அபேதமாக பாவிக்க வேண்டும். 'தந்திரராஜம்' என்கிற ஆகமத்தில் "ஊர்மி" என்கிற பதத்திற்கு மேற்சொன்ன பிரகாரமே பொருட்சொல்லி பாவனையையும் அவ்வாறேசொல்லியிருப்பதால், "ஷடூர்மி" என்பதற்கு பசி, தாகம், சோகம், மோஹம், மூப்பு, மரணமெனப் பிறரால் வியாக்கியானம் செய்யப்பட்டிருப்பது பிரத்தியக்ஷ சுருதி விரோதமானதால் ஆதரிக்கத்தக்கதல்ல.

12. [உப] நவாதாரங்களும் முத்ராசக்திகள். (12)

(குறிப்பு): — இவ்விடம் சதுரசிரத்தில் மூன்றும் ரேகையிலிருக்கும் முத்ராசக்திகளின் பாவனை சொல்லப்பட்டது. அம்முத்ரா சக்திகள் (1) சர்வசம்க்ஷோபிணீ, (2) சர்வவித்திராவணீ, (3) சர்வாகர்ஷணீ, (4) சர்வவசங்கரீ, (5) சர்வோன்மாதினீ, (6) சர்வமஹாங்குசா, (7) சர்வகேசரீ, (8) சர்வபீஜா, (9) சர்வயோனி என ஒன்பது. நவாதாரம் என்பது மூலாதாரம் முதலான ஷடாதாரங்களும், ஊர்த்துவ(மேலுள்ள) ஸஹஸ்ரதளகமலம், அதோ(கீழுள்ள) ஸஹஸ்ரதளகமலம், இந்திரயோனியென தைத்திரீய உபநிடதம் முறையிடும் லம்பிகாக்ரம் என்பவை. நவமுத்ரைகளும் முறையே (1) அதோ ஸஹஸ்ரதளகமலம், (2) மூலாதாரம், (3) சுவாதிஷ்டானம், (4) மணிபூரகம், (5) அநாஹதம், (6) விசுத்தி, (7) லம்பிகாக்ரம், (8) ஆஞ்ஞை, (9) அவாதசாந்தமாகிய ஊர்த்துவ சஹஸ்ரதள கமலம் என்கிற ஒன்பதுக்கும் அபேதமாய் பாவனை செய்ய வேண்டுவன—இவ்வொன்பது சக்ரங்களின் சமஷ்டியையே தேவியின் முத்திரையாகிய சர்வத்ரிகண்ட முத்திரைக்கு அபேதமாகப் பாவனை செய்யல் வேண்டும்.

சிலதந்திரங்களில் மூன்றுவது ரேகையில் தேவதைகள் சொல்லப்படாததால், அவைகளை

அநுசரிக்கும் பிந்துசூத்திரம் முதலான சாஸ்திரங்களில் சொல்லப்பட்ட ஆவரண தேவதைகளின் ஸ்தானங்கள் இங்கு எடுக்கப்படவில்லை. ஆனால் யோகினீஹிருதய மானது காதிமதத்தை அநுசரித்ததானதால், அதில் முத்திராதேவதைகளுக்கு சரீரத்தில் சொல்லப்பட்ட ஸ்தானங்கள் இங்கு எடுத்துக்கொள்ளத் தக்கன. இவ்வுபநிஷத்திற் சொல்லப்பட்ட தேவதாபாவனையானது பூஜை, நியாசம் இவ்விருவித ரூபமாகவுமிருப்பதாய் நிதிகாரர் முதலியோரின் சம்பிரதாயமானதால் நியாசத்திற் சொல்லிய விசேஷங்களையுமிங்கு சேர்க்கவேண்டுமென்பர். அதைக்கொண்டே பிரயோகவிதியில், சதுரசிரத்தின் முதல் ரேகைக்கு நமஸ்காரமென நியாசம்செய்ய வேண்டுமென்று சேர்க்கப்பட்டிருக்கின்றது. இவ்வபிப்பிராயத்தைக்கொண்டே ஸ்ரீசக்ரத்தின் ஒவ்வொரு ஆவரண பாவனையிலும் ஒரோர் சித்தி, முத்திரை, சக்ரேசுவரீ இவைகளின் பாவனை பிரயோகவிதியில் சேர்க்கப்பட்டிருக்கின்றது.

இரண்டாவது ஆவரணத்தின் பாவனை.

13. [உப] பிருதிவி, அப்பு, தேஜஸ், வாயு, ஆகாசம், சுரோத்திரம், துவக்கு, சக்ஷுஸ், ஜிஹ்வா, கிராணம், வாக்கு, பாணி, பாதம், பாயு, உபஸ்தம், மனோவிகாரம், (விகாரத்தையடைந்த மனம்) (இப்பதினாறும்) காமாகர்ஷிணி முதலிய பதினாறு சக்திகள். (13)

(குறிப்பு):- இங்கு பஞ்சபூதங்கள், ஞானேந்திரியம் ஐந்து, கர்மேந்திரியம் ஐந்து, விகாரமடைந்த மனம் இவை பதினாறையும் (1) காமாகர்ஷிணீ, (2) புத்திபாகர்ஷிணீ, (3) அஹங்காராகர்ஷிணீ, (4) சப்தாகர்ஷிணீ, (5) ஸ்பர்சாகர்ஷிணீ, (6) ரூபாகர்ஷிணீ, (7) ரஸாகர்ஷிணீ, (8) கந்தாகர்ஷிணீ, (9) சித்தாகர்ஷிணீ, (10) தைர்யாகர்ஷிணீ, (11) ஸ்மிருத்திபாகர்ஷிணீ, (12) நாமாகர்ஷிணீ, (13) பீஜாகர்ஷிணீ, (14) ஆத்மாகர்ஷிணீ, (15) அமிர்தாகர்ஷிணீ, (16) சரீராகர்ஷிணீ, என்று ஸ்ரீசக்ரத்தில் ஸம்ஹாரக்கிரமத்தில் (அதாவது லயக்கிரமத்தில்) இரண்டாவது ஆவரணமாகிய ஷோடச தளத்தில் இருக்கும் பதினாறு நித்தியகளைகளுக்கு அபேதமாகப் பாவிக்கவேண்டும். விகாரமடைந்த மனமென்பதால் பின்னால் 'மனமே கருப்புவில்' என்குமிடத்தில் சொல்லப்படும் மனதிற்கு வேறாகும்.—[இந்தக்குறிப்பில் கண்ட லயக்கிரமப் பிரகாரம் உபநிஷத் வாக்கியத்திற் கண்ட தத்துவங்களுக்குப் பிரயோக விதியில் அங்கநியாசம் சொல்லப்பட்டிருக்கிறது. ஆனால் அதன்மர்மம் குருமுகமாகவே யறிந்துகொள்ளல் வேண்டும். தேவியின் இந்த 16-நித்தியகளைகளும் முனீந்திரர்கள் மஹரிஷிகள் தேஹத்தில் ஷோடசதள பத்ம ரூபமாக வ்யாபித்திருக்கின்றன.—வி. சி. ப-ர்.]

மூன்றாவது ஆவரணத்தின் பாவனை.

14. [உப] வசனம் (பேசுதல்), ஆதானம் (எடுத்தல்), கமனம் (போதல்), விசர்ஜனம், (விடுதல்), ஆனந்தம், ஹானம் (தள்ளுதல்), உபாதானம் (ஏற்றுக்கொள்ளுதல்), உபேக்ஷ எனப்படும் புத்திகள் அனங்ககுசுமை முதலிய சக்திகளெட்டாகும். ( 4)

(குறிப்பு):—முற்சொல்லிய ஐந்தும் கர்மேந்திரியங்களின் தொழில்களாகும். தள்ளல்கொள்ளலென விரண்டுமின்றி உதாசீனமா யிருத்தல் உபேக்ஷையெனப்படும். இவ்வெட்டும் மூன்றாமாவரணமாகிய அஷ்டதளத்திலுள்ள அனங்ககுசுமா, அனங்கமேகலா, அனங்கமதனா, அனங்கமதனாதுரா, அனங்கரேகா, அனங்கவேகினீ, அனங்காங்குசா, அனங்கமாலினீ, என்கிற எட்டு சக்திகளுக்கு முறையே அபேதமாகும்.

நான்காம் ஆவரணத்தின் பாவனை.

15. [உப] அலம்புஸா, குஹூ, விசுவோதரா, வாரணா, ஹஸ்திஜிஹ்வா, யசோவதீ, பயஸ்வினீ, காந்தாரீ, பூஷா, சங்கினீ, சரஸ்

வதீ, இடா, பிங்களா, ஸுஷும்னா, என்ற பதினாலு நாடிகளும் ஸர்வஸம்க்ஷோபினீ முதலிய பதினாலு சக்திகள். (15)

(குறிப்பு):—இங்கு நான்கா மாவரணமாகிய 14-திரிகோண ரூபமாகிய சதுர்தசாரத்தின் பாவனை சொல்லப்பட்டது. பதினாலு சக்திகளாவன; சர்வசங்க்ஷோபிணீ, சர்வவித்ராவிணீ, சர்வாகர்ஷணீ, சர்வாஹ்லாதினீ, சர்வஸம்மோஹினீ, சர்வஸ்தம்பினீ, சர்வஜும்பினீ, சர்வ வசங்கரீ, சர்வரஞ்ஜினீ, சர்வோன்மாதினீ, சர்வார்த்தசாதினீ, சர்வஸம்பத்ப்ரபூரணி, சர்வமந்த்ரமயீ, சர்வதுவந்துவக்ஷயங்கரீ, என்பன. இந்நாடிகளின் ஸ்வரூபம் முன்னர் குருமண்டலமாகிய நவநாதர்களின் பாவனை சொல்லு மிடத்தே விவரிக்கப்பட்டது. சதுர்தசார தேவதைகள் அவைகளுக்கு அபின்னம்.

ஐந்தா மாருமாவரணங்களின் பாவனை.

16. [உப] பிராண—அபான—வியான—உதான—சமான—நாக—கூர்ம—க்ருகர—தேவதத்த--தனஞ்ஜயங்களாகிய பத்து வாயுக்கள் சர்வார்த்த சித்திப்பிரதை முதலான பஹிர் (வெளி) தசார சக்ரத்தின் தேவதைகள். (16)

17. [உப] இந்த வாயுக்களின் சம்பந்தமுள்ள உபாதியின் பேதத்தால், ஜாடராக்னியானது பிராணனை முக்கியமாய்க்கொண்டு ரேசகம் (வெளிப்படுத்துவது), பாசகம் (அன்னத்தைப் பக்குவப்படுத்துவது), சோஷகம் (வற்ற வைப்பது), தாஹகம் (எரிப்பது, சுடவைப்பது), பிலாவகம் (நிறப்புவது) எனஐவகையாகும். 17

18. [உப] நாகத்தின் பிராதான்யத்தால் அந்த ஜாடராக்னியே க்ஷாரகம் (காரத்தைக் கொடுப்பது), உத்காரகம் (வெளியில் தள்ளுவது), க்ஷோபகம் (அலைவு அல்லது எரிச்சல் அல்லது கலக்கத்தைச் செய்வது), ஜ்ரும்பகம் (கொட்டாவி விடச்செய்வது), மோஹகம் (மயக்கத்தை உண்டுபண்ணுவது) என ஐந்து விதங்களாகி, அவைகள் மனுஷ்யர்கள் தேகத்திலிருந்து கொண்டு, பக்ஷியம் (தின்னக் கூடியது), போஜ்யம் (சாப்பிடக்கூடியது), சோஷ்யம் (உருஞ்சி சாப்பிடக்கூடியது), லேஹ்யம் (நக்கிச் சாப்பிடக்கூடியது), பேயம் (குடிக்கக் கூடியது) என்கிற ஐந்துவிதமான அன்னத்தையும் பக்குவம் செய்கின்றன. (18)

19. [உப] இப்பத்து அக்னி கலைகளும் சர்வஞ்ஞா முதலான அந்தர்-தசாரத்திலுள்ள தேவதைகள். (19)

(குறிப்பு): —பிராணன் முதலிய மகா வாயுக்கள் ஐந்து, நாகன் முதலான உபவாயுக்கள் ஐந்து ஆகிய பத்தும், ஸர்வார்த்த சாதக சக்ரமெனப்படும் ஐந்தாமாவரணமாகிய பஹிர் (வெளி) தசார சக்ரத்திலுள்ள (1) சர்வசித்திப்பிரதா, (2) சர்வசம்பத் பிரதா, (3) சர்வப்பிரியங்கரீ, (4) சர்வமங்களகாரிணீ, (5) சர்வகாமப்பிரதா (6) சர்வ துக்கவிமோசினீ, (7) சர்வமிருத்யுபிரசமனீ, (8) சர்வவிக்ன நிவாரிணீ, (9) சர்வாங்கசுந்தரீ, (10) சர்வ சௌபாக்கியதாயினீ என்கிற பத்து தேவதைகளுக்கு அபேதமாய் பாவிக்க வேண்டும். ஜாடராக்னி ஒன்றே. பிராணன் முதலிய மஹா வாயுக்களைந்து, நாகன் முதலிய உபவாயுக்கள் ஐந்து, இப்பத்தினுடைய ஸம்பந்தத்தினால் பத்து விதமாகிய தொழிலுடைத்தானதாகும் என்பது வாக்கியத்தின் பொருள். ஜாடராக்னியின் தொழிலாகிய இப்பத்து அக்னி கலைகளும் ஆறுமாவரணமான சர்வரக்ஷாகர சக்ரமென்கிற அந்தர்(உள்)தசாரத்திலுள்ள (1) சர்வஞ்ஞா. (2) சர்வசக்தி, (3) சர்வைச்வர்யப்பிரதா (4) சர்வஞானமயீ, (5) சர்வவியாதிவிநாசினீ, (6) சர்வாதாரஸ்வரூபா, (7) சர்வபாபஹரா, (8) சர்வானந்தமயீ, (9) சர்வரக்ஷாஸ்வரூபிணீ, (10) சர்வேப்ஸித பலப்பிரதா என்ற பத்து சக்திகளுக்கு அபேதம்.

ஏழா மாவரணத்தின் பாவனை.

20. [உப] சீதம், உஷ்ணம், சுகம், துக்கம், இச்சைகள், சத்துவம், ரஜஸ், தமஸ், (இவ்வெட்டும்) வசினீ முதலிய எட்டு சக்திகள். (20)

(குறிப்பு)-சீதோஷ்ணம், சுக துக்கம் என்கிற இருதுவந்துவங்கள், இச்சை ஒன்று, முக்குணங்கள் ஆகிய எட்டும், சர்வரோகஹர மென்கிற அஷ்ட கோணத்திலுள்ள (1)வசினீ, (2) காமேசி, (3) மோதினீ, (4) விமலா, (5) அருணா (6) ஜயினீ, (7) சர்வேசி, (8) கௌளினீ என்கிற எட்டு வாக்தேவதைகளுக்கு அபேதமென்று பாவனை செய்யவேண்டும்.

ஆயுதங்களின் பாவனை.

21. [உப] சப்தம்முதலிய தன்மாத்திரைகள் ஐந்து புஷ்ப பாணங்கள். (21)

22. [உப] மனம் கரும்பு வில். (22)

23. [உப] ராகம் பாசம். (23)

24. [உப] துவேஷம் அங்குசம். (24)

(குறிப்பு)—இவ்விடம் அஷ்ட கோணத்திற்கும் மத்திய திரிகோணத்திற்கும் இடையிலுள்ள ஆயுதசாலை யெனப்படும் வீதியிலுள்ள ஆயுதங்களின் பாவனை சொல்லப்பட்டது. காமேசுவரர், காமேசுவரீ இருவருடைய ஆயுதங்களும் இங்கு இருப்பதாய் ஆகமங்கள் சொல்லும். சப்த, ஸ்பரிச, ரூப, ரச கந்தங்களாகிய பஞ்சதன்மாத்திரைகளும் காமேசுவரர் காமேசுவரீ இருவருடைய பஞ்சபுஷ்ப பாணங்களுக்கு அபேதமாகும். தன்மாத்திரைகளை ஐம்பாணங்களாகிய புஷ்பபாணங்களாய்ச் சொல்வதேதனாலெனில் அவை சுகத்திலபிமுகமாயிருந்து கடைசியில் துக்கத்தைக் கொடுப்பதால்தான்.

விகாரமடையா மனம் வெள்ளைக் கரும்பு வில்லுக்கபேத மாகும். முன்னரே விகாரமடைந்த மனதைச் சொல்லியாய் விட்டது. மனமானது விஷயங்களினிடம் பாய்தல் ரூபமாகிய இந்திரியங்களைச் செலுத்துவதால், கரும்பு வில்லாகச் சொல்லப்பட்டது. ராகம் என்றால் பிரீதி. அது சைவசாக்தாகமங்களிற் சொல்லப்பட்ட 36 தத்துவங்களில் ஒன்று. சாமான்யமான 'இச்சை' யன்று; ஆகையால் அருணாவாக் தேவதைக்கு பாவனையாய்ச் சொன்ன இச்சையல்ல. பாசத்தைப்போல் ராகம் பந்தமானதால் சர்வ வசீகரமாகிய, பாசத்திற்குப் பாவனையாய்ச் சொல்லப்பட்டது. துவேஷம் என்றால் குரோதம் அல்லது வெறுப்பு. அது அங்குசத்தைப்போல் துவேஷ்யமாய் இருப்பதாலும் வேண்டாதனவைப் போக்கடிப்பதாலும் சர்வஸ்தம்பனமாகிய அங்குசத்திற்கு பாவனையாய்ச் சொல்லப்பட்டது.

எட்டா மாவரணத்தின் பாவனை.

25. [உப] அவ்யக்தம், மஹத், அஹங்காரம் (இவை) காமேசுவரீ, வஜ்ரேசுவரீ, பகமாலினீ என்கிற திரிகோணத்தினுள்ளிருக்கும் தேவதைகளாம். (25)

(குறிப்பு)—இதில் எட்டாவதாவரணமாகிய சர்வஸித்திப் பிரதமென்கிற மத்தியகோணத்திலுள்ள தேவதைகளின் பாவனை சொல்லப்பட்டது. அவ்யக்தமென்பது பிரகிருதி தத்துவம். அது மத்தியத் திரிகோணத்திலுள்ள பகமாலினி தேவதையோடு அபின்னம். மஹத் என்கிற அஹங்காரம் காமேசுவரீயோடு அபின்னம். அஹங்காரம் வஜ்ரேசுவரீ யோடபின்னம்.

ஒன்பதாமாவரணத்தின் பாவனை.

(அவதாரிகை) பின்வரும் மூன்று வாக்கியங்களால் பதினொரு பதார்த்தங்கள் சொல்லப்பட்டிருக்கின்றன. அவையாவன:—

(1) முக்கிய விசேஷ்யையாகிய லலிதை.

(2)விசேஷ்யதாவச்சேதகமான காமேசுவரர்.

(3-4) இவர்களின் ரக்த, சுக்ல சரணங்கள்

(5) இவ்விருவர்களுச்கு மாத்திரம் உள்ள சம்பந்த விசேஷம்.

(6-7-8) ஸ்தூல, சூக்ஷ்ம, மிசிரசரணத் தன்மை.

(9) உபாஸனு பிரகாரத்தின் விஷயமாகிய உபாஸகன்.

(10) அவனுக்கும் உபாஸனு தேவதைக்கும் சம்பந்தம்.

(11) பிரகாரதாவச்சேதகம். என்பன.

26. [உப] நிருபாதிக (உபாதியற்ற) சம் விதே (ஞானமே) காமேசுவரர். (26)

27. [உப] சதானந்த பூர்ணமான ஸ்வாத் மாவே பரதேவதையாகிய லளிதை. (27)

(குறிப்பு) இவ்விடம் நவாவரணங்களில் கடையதாகிய சர்வானந்தமய சக்ரமெனப்படும் பிந்து சக்ரத்தின் பாவனை சொல்லப்பட்டது. உபாதி ரஹிதமாகிய சுத்தசைதன்யமே பிந்துரூபமாகிய காமேசுவர். "சம்வித்" என்ற பதத்திற்கு "நிருபாதிகம்" என்றவிசேஷணத்தைக் கொடுத்திருப்பதால், அந்நிருபாதிக சம்விதாகிய காமேசுவரர் அங்கத்தில் வீற்றிருக்கும் பரதேவதையாகிய லளிதைக்கு ஏதோகொஞ்சம் உபாதியுண்டென்றும் அதனுல் உபாசகனுக்கு பின்னமாய் உபாஸிக்கப்படும் பொருள் என்ற குணமேற்படுமென்றும் வெளியாகும். அப்பரதேவதை தன் ஆத்மாவைத் தவிர வேறல்ல. தனக்கபின்னமான பரதேவதை யானவள் உபாஸனு ரூபமாகிய ஞானவிசேஷத்தால் நிருபிக்கக்கூடிய முக்கிய விசேஷத்தையை யுடையவள். அவளையே அவளுக்கே உரித்தான லளிதை யென்னும் பேரால் குறிப்பார். "சதானந்தபூர்ணம்" என்கிற பதத்தால் அவளுக்கு சதானந்தமாகிய உபாதி யென்று குறிக்கப்பட்டது. ஆகவே சத் என்கிற அடைமொழியினுல் அந்தக்கரண சம்பந்தமுடைய ஆநந்த முடையவள் லளிதையாக மாட்டாள். அப்பொழுது அவளை உபாஸகக் கூட்டத்தில் சேர்க்கவேண்டுவதாகும். இக்கருத்தைக் கொண்டே "ஸ்வாத்மா" (தன் ஆத்மா) வென்கிறபதம் உபயோகிக்கப்பட்டிருக்கிறது. ஸ்வாத்மா வென்ருல், ஸ்வ-உபாஸகனுகிய தன்னுடைய, ஆத்மா-அந்தர்யாமி, யெனப் பொருளாகும். ஆகவே, ஆத்மா ஒருவனே அந்தக் கரணேபாதியோடு கூடினவனுய் உபாஸகனுகவும், சத்து, சித்து, ஆனந்த மென்கிற மூன்று தர்மங்களினின்றும் விடுபட்டவனுய், தர்மி (தர்மத்தையுடையவன்) மாத்திரமாய், உபாஸ்யமாகிய பரதேவதைக்கு ஆதார பூதனுகிய காமேசுவரராகவும் இருக்கின்ருனென்பது கருத்து. இவ்விஷயத்தை அப்பயதீக்ஷிதரவர்கள் ரத்னத்ரய பரீக்ஷை யென்கிற கிரந்தத்தில் பின்வருமாறு சொல்லியிருக்கின்ருர்:—

"நித்தியமாய் தோஷமென்பதின் வாசனை "கூட இல்லாததாய் நிரதிசயானந்தமாகிய பிர "ஹ்மம் சைதன்ய மொன்றே மாயா வசத்தால் "வேறுபட்டு "தர்மம்" "தர்மி" என இருவகைப் "பேதத்தை யடையும். அவற்றுள் தர்மம் "என்பது ஒன்ருயிருந்தே, ஸ்வப்பிரகாசரூப "மான தர்மிக்கு ஸகல பிரபஞ்ச விஷயமான "அனுபூதியாகவும், சகலகார்யங்களை சித்திக்க "அநுகூலமான ஸ்வேச்சா-ஞான-கிரியா ரூப "மான சக்தியாகவும், குணசமூகமாகவு மிருக் "கும். வேதத்தை யறிந்தோர் இத் தர்மத்தை "யே சர்வவியாபகமானதும், அகிலாதாரமு "மாகிய ஆகாசமென்றும், சிதம்பர சக்தி "யென்றும், மனேவாக்குகளுக் கெட்டாத தர் "மியின் ஆனந்தமென்றும் ஸதாநந்த ஸ்பூர்த்தி "யென்றும், மூவுலகுக்கும் அகமென்றும், பிரா "ணேபாஸனை, ஆகாசோபாஸனை இவைகள் "அதை ஆதாரமாயுடைத்தனவாகி, அதில் ஓர் "அம்சமானவையெனவர்ணிப்பார். இவற்றுள் "தர்மி * யானது ஜகத்தின் சிருஷ்டி, ஸ்திதி,

* இது ரத்னத்ரய பரீக்ஷை அச்சுப்புஸ்தகத்தின் பாடம். பாவனேபநிஷத் பாஷ்ய புஸ்தகத்தில் "தர்மமானது" என்று பாடம் காணப்படுகிறது. முன் பாடமே சுத்தமெனத் தோன்றுகிறது.

"ஸம்ஹாரம், திரோதானம், அனுக்கிரகம் என்
"கிற பஞ்சகிருத்தியத்தில் கர்த்திருத்துவத்
"தை யடைகின்றது. தர்மம் இருவகையாகும்.
"ஒன்று புருஷரூபமான ஆத்மாவாய் சகல ஜக
"த்துக்கும் உபாதான காரணத்தன்மையைத்
"தரித்துநிற்கும். அதுவே ஸ்திரீரூபமடைந்து
"தனக்கு ஆசிரயமாகிய (ஆதாரமாகிய) ஆதி
"கர்த்தாவுக்கு (தர்மிக்கு) திவ்யமஹிஷியாய்
"(பட்டஸ்திரீயாய்) நிற்கும். தர்மத்தின் இவ்
"விரண்டு பேதமும் வேதமறிந்தோரால் தர்மி
"யைப்போல் பிரஹ்மமென்றே சொல்லப்ப
"டும். தர்மியையே சம்புவென்றும், சிவமென்
"றும், பரப்பிரஹ்மமென்றும் சொல்வர். தர்ம்
"மியின் திவ்ய மஹிஷியைப் பிரசித்தமாய் அம்
"பிகையென்றுஞ் சொல்வர்—சகல ஜகத்துக்கும்
"உபாதானமாகிய பரமபுருஷனே (புருஷோத்
"மனே) நாராயணனென்று ஸ்ரீ கூர்ம புராண
"வாக்கியங்களாலும் நாரதர்வாக்கியங்களாலும்
"வெளியாகும்."*

28. [உப] இவை சர்வத்தின் விமர்சம் (அநு சந்தானம்) லௌஹித்யமாம் (தேவியின் சிகப்பு நிறமாம்). [28)

(குறிப்பு) சர்வமென்பது காமேசுவரர், லளிதை, உபாசகனாகிய தான், இம்மூன்றையுங்குறிக்கும். இம்மூன்றின் அநுசந்தானமே தேவியின் சிகப்பு நிறம். சகலருக்கும் ஸ்வாத்மாவினிடம் அநுராகம் எப்பொழுதும் உள்ளது. தேவி, ஸ்வாத்மா வானதாலும், அநுராகத்திற்கும் சிகப்புநிறத்திற்கும் அபேதமானதாலும், இது ஒக்கும். இதில் குருமுகமா யறியவேண்டிய ரஹஸ்யமாவது—"நிருபாதிகம்" என்கிற பதத்தால் கேவலத்தன்மையையும், "சதானந்தபூர்ணம்" என்கிற பதத்தால் தர்ம விசிஷ்டத்தன்மையையும் கூறுவதால், கேவலத்திற்கும் (தர்மிக்கும்), விசிஷ்டத்திற்கும் (தர்மமாகிய லளிதைக்கும்) அயுதஸித்தங்களாகிய அதாவது பிரிக்கக்கூடாதனவாகிய அவயவி அவயவங்களுக்குப் போல் (அதாவது நூலுக்கும் வஸ்திரத்திற்கும் போல்) பேதமில்லாமையால், அவர்களுக்கு தாதாத்மியம் என்கிற சமவாயி சம்பந்தமேயன்றி, பேதமான ஸம்யோகம் முதலான சம்பந்தமில்லை. ஆனால் திரிபுரசுந்தரி, காமேசுவரர் இவர்களின் சரீரங்களாகிய ஸ்தூல ரூபமிரண்டின் சம்பந்தமோ, காமேசுவரரின் அங்கத்தில் (மடியில்) காமேசுவரீ இருப்பதாகச் சொல்லியிருப்பதால், சிவசக்தி சமரஸஸ்வரூபமாகிய அச்சம்பந்தம், சாயத்திற்கும் துணிக்குமுள்ள சம்பந்தத்தைப் போல் ஒருவித சம்யோக சம்பந்தமென்றே சொல்லல் வேண்டும்.

இவ்வாறு உபாதியற்றதே சுத்தமானதாலும், ஸ்படிகமானது மற்ற வர்ணங்களின் சேர்க்கையில்லாத காலத்தில் மாத்திரம் வியக்தமாவதாலும், சுத்தத்தை ஸ்படிகத்திற்கு அபேதமாய்ச் சொல்லி, நிருபாதிகமாகிய காமேசுவரரை சுக்ல சரணர் (வெண்மையாகிய பாதார விந்தங்களை யுடையவர்) என்கிற பாவனைக்கு லக்ஷியமாகக் கூறினர். அநுசந்தானமானது "அஹம்" † ரூபமான மானஸவிருத்தி மாத்ர ரூபமானதால், அவ்வாறு அவ்வநுசந்தானத்திற்கு விஷயமாயிருத்தலாவது, அவ்வாறு

* இதன் பொருளாவது.—"தர்மம்" பிரவிர்த்தி யுன்முகமாய் ஜகத்தைப்பாலனம் செய்யும் பொழுது புருஷரூபமாகிய விஷ்ணுவென்றும், அத்தொழிலி லனுத்து நிவர்த்திமார்க்கத்தில் நிற்கும்பொழுது தர்மி யுன்முகமாய் (அந்தர்முகமாய்) கற்புடையபெண்ணன வள் எப்படி தன்போதம் முற்றையுமடக்கி தன்புருஷ னுக்கு அதீனமாக்கச் செய்கிருளோ, அவ்விதம் இவ் வவசாத்தில் "தர்மம்" தான் பரம்பொருளிடம் அதீன மாய் விடுவதால் பெண் ரூபமாய் வர்ணிக்கப்படும். பிரவிர்த்திக்குப்பின்தான் நிவர்த்தி மார்க்கத்தில் பிர வேச முண்டாவதால்தான் பரதேவதையை விஷ்ணு வின் தங்கையாக பாவிப்பதும், ஸ்ரீ அப்பர்சுவாமிகள் "ஹரியலால் தேவியில்லை ஐயனையாறனார்க்கே" என்று சொன்னதும் என்றுணரவேண்டியது.

† ஸ்ரீ பாதேவதையை "பராஹந்தா" அல்லது பூர்ணாஹந்தா ஸ்வரூபமானவள் என்று சாஸ்திரங்கள் சொல்லும். "அகம்" என்கிற ராகம் சித்தினிடம் இருப்பதால் அதை சிகப்பாகச் சொல்லப்படும்.

விஷயமாயிருத்தலுக்கு சம்பந்தமான விருத்தி யாவது, அவ்விருத்தி சம்பந்தமுள்ள மனஸாவது ராகத்திற்கு அபேதமானதால் (ராகம் என்றால் பற்றுதல், சிகப்புவர்ணம் இரண்டையும் குறிப்பதால்), (ராகஸ்வரூப) அவ்வநுசந்தானத்தால் விசிஷ்டமாயிருக்கும் ஸ்ரீபரதேவதைக்கு "ரக்த சரணம்" (சிகப்பு வர்ணமுடைய பாதார விந்தங்களை யுடையவள்) என்கிற பாவனை ஏற்படும். "சர்வம்" என்கிற பதத்தால் இவ்விரு சரணங்களின் காந்தியின் சமரசபாவ சம்பந்த ரூபமாகிய மிச்ரசரணத்தின் பாவனையும் சூசிக்கப்பட்டது. இது விஷயமே பின்வரும் குரு வந்தன சுலோகத்திலடங்கியிருக்கும்: "வந்தே குருபத த்வந்த்வம் அவாங்மனஸகோசரம், ரக்த சுக்ல ப்ரபாமிச்ரம் அதர்க்யம் த்ரைபுரம் மஹ:—." தந்திரராஜத்தி "ஆதிசக்தியே குருவாகும்' என்ற இவை முதலான பாவனைகளின் அனுசந்தானமே உபாசனை யென்று சொல்லப்படும். அதுவே நான்காவது சரணம். அல்லது உபாஸனை மூவிதமாகும்: அவை விக்ரஹாதிரூபமான ஸ்தூல உபாசனை, மான சிகஜபமாகிய சூக்ஷ்ம உபாஸனை, முற் சொல்லிய பாவனையாகிய பரஉபாஸனை என்பன. ஆகையால் உபாஸனையாகிய பாவனையை பாவனை செய்யும்படி சுருதி விதித்துவிட்டதாக சந்தேகம் ஏற்பட விடமில்லை.

## The Coronation Festivities.
## முடிசூட்டல் கொண்டாட்டம்.

1911-ம் ஞு ஜூன்மீ 22உ வியாழக்கிழமை யன்று மாக்ஷிமைதங்கிய 5-வது ஜார்ஜ் அரசருக்கும் மேரி மஹாராணி யவர்களுக்கும் நாம் 'மகுடாபிஷேகம்' என்று சொல்லும் முடிசூட்டும் சடங்கு வெகு ஆடம்பரமாக நடந்தேறியது. அதற்காக எல்லா தேசங்களிலிருந்தும் பிரதிநிதிகள் வந்திருந்தார்கள். அன்றைக்கு லண்டன்மாநகர் இந்திரப்பட்டணம் போல் விளங்கியது. இராஜ்ஜிய முழுவதிலும் அத்தினத்தை சுதினமாகக் கொண்டாடினார்கள். இந்தியாவில் ஊர் ஊராக அத்தினத்தைக் கொண்டாடினார்கள். கோயில்களிலும் மசூதிகளிலும், அபிஷேகங்களும் பிரார்த்தனைகளும் நடந்தன. வருகிற டிசெம்பர் மீ 12உ மாக்ஷிமைதங்கிய அரசரும் அவர் ராணியாரும் இந்தியாவுக்கு வந்து டில்லி மாநகரில் இந்தியா சக்ரவர்த்தி சக்ரவர்த்தினியாக முடிசூட்டிக் கொள்வார்கள். அப்பொழுது ஒரு பெரிய தர்பார் கூடும்.

## The Manufacture of Camphor.
## கர்ப்பூரம் செய்பல்.

கடையில்விற்கும் கர்ப்பூரம் கர்ப்பூர மரத்திலிருந்து உண்டாகிறது. அந்தமரம் வெகு காலம்வரையில் நீடித்திருக்கும். அது ஜப்பான் தேசத்தில் ஏராளமாகப் பயிராகி வருகிறது. கர்ப்பூரமரங்கள் அங்கே பெருங்காடுகளாகவும் தோப்புகளாகவும் இருக்கின்றன. இதுவரையில் 50 வருஷமான மரங்களை அடியோடுவெட்டி அதன் இலைகளைத் தள்ளிவிட்டு, மரக்கிளைகளைமட்டும் கர்ப்பூர ரஸமிறக்குவதற்காக உபயோகிப்பது வழக்கம். இது பண்டைக்காலம் முதற்கொண்டு வழக்கமாயிருந்து வருகிறது. இதனால் 100 முதல் 200 வருஷங்கள் வரையில் வளரக்கூடிய கர்ப்பூரமரங்கள் வெட்டிச் சேதமாக்கப்பட்டுவந்ததால், கர்ப்பூரம் விலை கிராக்கியாக நேரிட்டது. இப்பொழுது மலேயா தீவிலும், கிழாபிரிக்காவிலுள்ள அமானி (Amani) என்னுமிடத்திலுள்ள பரிசோதக சாலையிலும் ஐரோப்பியர் பரிக்ஷைசெய்து பார்த்ததில் மரத்தைவெட்டாமல் தானே, அம்மரத்தின் தழைகளை யறுத்து கர்ப்பூரம் செய்யலாமென்றும், அப்படிச்செய்வதால், மரத்தைவெட்டிச் செய்யும் கர்ப்பூரத்தைவிட அதிக கர்ப்பூரம் கிடைப்பதா யிருக்கிறதென்றும், மரத்துக்கும் சேத

மில்லாமல் அது வெகு காலத்துக்கு நீடித்திருக்கத்தக்கதாகிறதென்றும் நிர்ணயமாகக்கண்டு பிடித்திருக்கிறார்கள்.

ஜெமெய்காதீவில் ப்ரொபெஸர் ராபர்ட் கென்னடி டங்கன் அவர்கள் இந்தப்புதிய வழியை யனுசரித்துப் பரீக்ஷைகள் செய்துபார்த்து இதுவே நலமென்று தீர்மானித்திருக்கிறார். இவர் ஒரு டன் நிறையுள்ள கர்ப்பூரத்தழையை அமெரிக்காவிலுள்ள கான்ஸாஸ் யூனிவர்ஸிடிக்குக் கப்பலேற்றிக்கொண்டுபோய் தானே பரீக்ஷைசெய்து பார்த்ததில், மரத்தைவெட்டி கர்ப்பூர ரஸமிறக்கினால் 100 க்கு ·61 அசுத்த கர்ப்பூரம் தேறுகிறதென்றும்; கிளைகளிலிருந்து 100 க்கு 1·05 தேறுகிறதென்றும், பச்சையிலையிலிருந்து 100க்கு 2·37 தேறுகிறதென்றும், உலரவைத்த இலைகளிலிருந்து 100 க்கு 2·52 தேறுகிறதென்றும், உதிர்ந்துபோன சருகுகளிலிருந்து 100க்கு 1·39 தேறுகிறதென்றும் பரீக்ஷைகள் செய்து கண்டுபிடித்திருக்கிறார்.

இந்தப் பரீக்ஷைகளினால் கர்ப்பூர மரத்தில் அதிகமாய்க் கர்ப்பூரரஸமில்லையென்றும், அதன் தழைகளில் அதிகமான ரஸமிருக்கிறதென்றும் ஆகையினால் மரங்களை வெட்டிச் சேதமாக்காமல் தானே வருஷத்துக்கொருதரம் தழைகளை யறுத்து கர்ப்பூரம் செய்யலாமென்றும் நன்றாக ஏற்படுகிறது. இதனால் கர்ப்பூரச் சரக்கு விர்த்தியாகும்.

———:———

## "Cease thou All Vain Talk."— A, Short Story.

### "உன் வாயடைக்க!"

### ஓர் உண்மையான சிறு கதை.

——:-0-:——

"உள்ளம் பெருங்கோவில் ஊனுடம்பாலயம்
கள்ளப் பிரானார்க்கு வாய் கோபுரவாசல்."
'நானெனநீயெனத்தத்துவமிரண்டே.'—திருமந்திரம்.

"சாகா திருந்த தலமே மவுனமதி
ஏகாந்த மாக விரு"—ஔவைகுறள்.

நான் ஒரு மாசமாக தேஹம் சுவாதீனமில்லாமலிருந்து ஒருவாறு சொஸ்தப்பட்டபின், வெளியேறி நித்தியப்படி வேலைகளைக் கவனிக்கலாமென்றிருந்தேன். தேஹத்திற்குண்டான ஆயாஸம் முற்றும் தீர்ந்ததில்லையாயினும், ஒருவாறு மனோதிடத்தினால் தேஹத்தை திடப்படுத்திக்கொண்டு ஒரு மாசகாலமாகக் கண் காட்சியில்லாமல் களேபரமாயிருந்த வேலையை ஒருவாறு கண்பார்த்துச் சீர்திருத்தலாமென்றிருந்தேன். இப்படி வெளியேறவிருந்த தினத்தன்று தேஹம் திடீரென்று உபாதிகண்டு எழுந்துநடக்கச் சக்தியில்லாமல் படுத்த வண்ணமாயிருக்க வேண்டி நேரிட்டது. இப்படி இரண்டு நாளிருக்க மறுபடியும் தேஹம் குணப்படலாயிற்று! காரணம்:-பழைய நண்பர் ஒருவரை நினைத்துக் கொண்டிருக்க, அவர் அகஸ்மாத்தாய் நேரில் வந்து தரிசனங் கொடுக்க நேரிட்டது. அந்த ஸங்கல்ப ஸித்தியினாலுண்டான மனவெழுச்சியில் தேஹத்தின் அயர்வும் சோர்வும் தெரியவில்லை. யோகக்ஷேமம் விசாரிக்கவென்றுவந்த நண்பருடன் அளவளாவியிருந்து லௌகிக விஷயமாக ஏதோ ஒரு ஆலோசனை கேட்டதற்கு, அவர் பிரஹ்லாதன் சரித்திரத்தைச் சாமான்ய வார்த்தைகளால் அதிற் பொதிந்து கிடக்கும் அசாமான்யமான தத்துவ ரகஸியங்களையெடுத்துக் காட்டி, உவமான உவமேயத்தோடு விஷயார்த்தமான சம்பாஷணையைத் தத்துவார்த்த காலக்ஷேபமாக மாற்றி உள்ளங்களிகூற உடலுவகை பூரிக்க உரையாடிச் சென்றார். உண்டான தேஹமனோ உற்சாகத்தில் தேஹத்தின் சோர்வு தெரியவில்லை. வந்துபார்த்த நண்பரைத் திரும்பிப்பார்க்க வேண்டுமென்கிற உபசாரம் பற்றி உண்மையாகப் பார்க்கப் போனேன். போன விடத்தில் ஒரு அதிர்சயம் நடந்தது. அதை விவரிக்கில் வளரும். "பொன்னம்பலம் திறந்து வெள்ளியம்பலம் கள்ளமின்றிப் பிரகாசிக்க லாயிற்று."

அந்த "வெள்ளியம்பலத்திலே" "வேதாந்த சித்தாந்த ஸமரஸ நன்னிலை பெற்ற வித்தகச் சித்தர்கணமே" யென்று தாயுமானவர் பாடிய

சித்தர்கணம் சிவகோஷம் செய்து பரமனைத் துதித்த சப்தம் அநாஹத ஸ்தானத்தில் ஆசங்கையின்றிக் கேட்கலாயிற்று. இந்த அனுபவத்தை உண்மையென்று கொள்பவர் கொள்ளட்டும்; பொய்யென்று தள்பவர் தள்ளட்டும்; அதனால் எனக்காவது, சித்தர்கணத்துக்காவது, சிவனுக்காவது குறைவொன்று மில்லை.

"அற்புத விக்கிரஹ அமராதீசுவா
அகணித கணகுண அம்ருதசிவா"

என்கிற அகாராக்ஷர வர்ணனையை உள்ளத்தில் சிந்தித்து அம்பாளோடு கூடியவரான குருமூர்த்த சிகாமணியாம் 'ஸாம்ப ஸதாசிவத்தை' ஹிருதாயாகாசத்தில் தோன்றச் சிந்தித்து அச்சிந்தனையும் நழுவினவிடத்தில் மேற்குறித்த "அகாராக்ஷர வர்ணனையை" ஸபீஜமாகவும், நிர்பீஜமாகவும் சிந்தைகடந்த விடத்தில் சிந்தித்து நிற்போர்க்கு, நாம் சொல்லிய அனுபவம் மெய்யென்றும் பொய்யென்றும் பிரத்தியக்ஷ ப்ரமாணமாக அறிந்துகொள்ள வழியேற்படும். மற்றப்படி இந்திரியங்கள் போனவழி மனதை விட்டு, மனம்போனவழியில் புத்தியைப் போக விட்டு, புத்தி பேதித்துப்போன வழியில்தானே அறிவையும்(ஆத்மாவையும்) நிலைதடுமாறிப்போகவிட்டு, "கொண்டதேகோலம் கண்டதேகாட்சி"யெனத் திரிகிறவர்களுக்கு நாம் ஒன்றும் சொல்லவரவில்லை. இந்த அதிசயக்கதையை அன்புகூர்ந்து படித்து, எழுதினவன் கிருதார்த்தனாக அருள்புரிய வேண்டுமென்று மட்டும் அவருள்ளத்தில் விசுவரூபியாய் விளங்கும் அம்பீஜலக்ஷியார்த்த சுந்தரனைப் பிரார்த்தித்துக் கேட்டுக்கொள்கிறோம்.

"வித்தகச் சித்தர்கணம்" வெள்ளியம்பலத்திலே செய்த கோஷத்வனி அநாஹத ஸ்தானத்திலே சூக்ஷ்மசப்தமாகக் கேட்டது. கேட்டுக் கண்(அகக்கண்) விழித்துப்பார்த்தேன். கண்ணுக்கு ஒன்றும் தோன்றவில்லை. ஆனால் அந்த சப்தத்திலுஞ்சூக்ஷ்மமான துவனியொன்று உள்ளிந்திரியமாம் காதிற்பட்டது. அந்த துவனியிலே கண்ணுங்கருத்துமாயிருக்க, அதிலிருந்து அதிர்சயமான ஜோதியொன்று பிரத்தியக்ஷமாயிற்று. அந்த ஜோதியம்பலத்துள்ளே ஒரு பொன்னம்பலம் பிரத்தியக்ஷமாகத் தோன்றலாயிற்று. அந்தப பொன்னம்பலத்தினுள் புகுந்து பார்க்கவும், அது சிற்றம்பலத்தின் சோதியன்றி வேறில்லையெனக்கண்டேன். சிற்றம்பல தெரிசனம் செய்துகொண்டு பஞ்சாக்ஷரப் படியேறி யிறங்கினேன். ஏற்றம் இறக்கம் இரண்டையும்விட்டு பஞ்சாக்ஷரப்படியின் உண்மையை யுள்ளத்துணரவும், அவ்வுண்மையுணர்ந்த வுள்ளத்தின் மத்தியிலே ஒரு வெண்ணிலாத் தோன்றியது. அந்த வெண்ணிலாவையுற்றுநோக்கித் தியானிக்க, அங்கேதானே சிவனின் ஜடாமுடிபாரம் அக்னிப் பிழம்பாகத் தோன்றிற்று. அந்த அக்னிப்பிழம்பின் மத்தியில் தண்ணளிவீசும் வெண்ணிலா விருக்கக்கண்டேன். சியாமளா தேவியைச்சிந்தித்து அந்த அக்னியைத் தொழுது அதிற் பிரவேசித்தேன்.

"அம்புலிமானே ஆடியசிற்றப்பா எங்கெங்கேபோ'றே"யென்று சிறுகுழந்தைகள் பஹிராகாசத்தில் சந்திரனைவிளித்து "சந்திரமாமா வா வா" என்று கூப்பிடுவதுபோல, நானும் விளையாட்டென்றும் வினையென்று மறியாமல், அக்னியிற் பிரவேசித்து அதனுள் தண்ணளி வீசியுள்ளங்குளிர உயர்நலம் விளங்க எறித்த அழகிய வெண்ணிலாவைப் பிடித்துவிடப் பார்த்தேன். அக்னிபயம்நீங்க சியாமளாதேவியைத் துதித்து அவளோடைக்கியமாகித் தீக் குதித்தேன்.

அந்தத் தீ யென்னைச் சுட்டதில்லை தொட்டதில்லை. ஆனால் என் அகம்பாவத்தைப் பொடி சாம்பலாகச் சுட்டெரித்துவிட்டது. அஹம்பாவம் அற்றுப்போகவே சற்றுமயக்கம்

கொண்டு தியங்கி விழித்தேன். சியாமளை "அப்பனே என்ன மயக்கம்! ஏனிப்படித் தியங்குகிறாய்? ஏதோ கொள்ளைகொடுத்தவன் போலவும் தேடித்தியங்கிப் பார்க்கிறாயே! என்ன?" வென்று மனங்குளிரக் கேட்டாள்.

"அம்மணீ! என்னைக் கொடுத்து உன்னைக் கொண்ட போதிலும் ஒழியாத 'நான்' இப்பொழுது எங்கேயோ என்னைவிட்டோடி ஒளித்துக்கொண்டு விட்டது! அதைத்தான் தேடிப் பார்க்கிறேன். இந்தச் சுத்தவெளியில் அது எங்குதான் ஒளித்துக்கொள்ளக்கூடும்! என்று தியங்குகிறேன்!" எனப் பதில் சொன்னேன்.

அது எங்கும் ஒளித்துக்கொள்ள வில்லை! இதோ இருக்கிறதுபார்! என்று உத்தூளனமான விபூதியைக் கையில்கொடுத்து மேலெங்கும் தடவிக்காட்டி அதையே பூசிவிட்டாள்.

"ஐயகோ! சாம்பலாண்டியாய் விட்டேனே!" யென்று குழந்தைபோல் ஆச்சரியப்பட்டுத் திகைத்து நகைத்தேன். நகைத்த நகைப்பில் மின்னற்கொடிபோல் என்னெதிர் நின்ற சியாமளாதேவி திடீரென்று போனவிடம் வந்தவிடம் தெரியாமல் மறைந்துபோனாள். "இதென்ன ஆச்சரியம்!" என்று சுற்றுமுற்றும் பார்த்தேன்.

முன்கண்டதோர் 'வெண்ணிலா' இப்போது வெள்ளியம்பலமாய் விளங்கக் கண்டேன்! வெண்ணிலாவைப் பிடிக்கப்போய் வெள்ளியம்பலத்தில் புகுந்துநிற்கக் கண்டேன். அங்கே கண்டதோர்காட்சியைச் சொல்லாமற் சொல்லி விண்டேன்.

அங்கே "வித்தகச் சித்தர்கணம்" பாடிய அகாராக்ஷர வர்ணனையைச் சொன்னேன். அகார லக்ஷியத்தைப் பிரத்தியக்ஷ சாக்ஷாத்காரமாய் அறிந்துகொண்டு, உகாராக்ஷரத்தைப் பார்த்தேன்.

"உரகாதிப் பிரிய பூஷண சங்கா
நரகவிநாச நடேச சிவா"

என்கிற சப்தம் (காதில்லாத) காதில் விழுந்தது. அதன் லக்ஷியத்தையும் உணர்ந்து கொண்டு மகார மெங்கேயென்று மறைவழிப்பட்டுப் பார்த்தேன். எங்கும் காணவில்லை. மறைவழி விட்டு நிறைவழிபற்றி நிமிர்ந்து பார்த்தேன். "வித்தகச்சித்தர்கணம்,—"

"மன்மத நாச மதுபானப்பிரிய
மந்தரபர்வத வாஸ சிவா"—என்று

ஆர்ப்பரித்துக் கரகோஷம் செய்தார்கள்.

"மந்தர பர்வதமெங்கே!" யென்று கேட்டேன்.

தந்த்ரபர்வதத்தைக் காட்டினார்கள்.

"இது தந்த்ரமல்லவா, மந்த்ரம் எங்கே?" யென்றேன்.

எல்லாரும் கைகொட்டிச் சிரித்து,—

"ஓம்காரப்பிரிய உரக விபூஷண
ஹ்ரீம்காராதி மஹேசசிவா"—என்று

பின்னும் சிவநாமஸ்மரணை செய்தார்கள். "ஓம்காரசப்தம்" காதில்படவும் பிரணவோபாசனை செய்தவாசனை மேலிட்டதால், "மனம் ஒரு வழிபட்டது மந்திரம்" என்கிற வாசனையுதிக்க, அதிலிருந்து "மந்த்ரபர்வதமெங்கே?" யென்று கேட்ட கேள்விக்குத் "தந்த்ர பர்வதத்தைக் காட்டினார்கள்" என்றதிலுள்ள மர்மம் தெரிந்தது.

"மந்த்ரராஜாய வித்மஹே, மஹா தந்த்ராய தீமஹி,
தன்னோமந்த்ர ப்ரசோதயாத்,"

என்கிற மஹாமந்த்ரம் ஞாபகத்துக்கு வந்தது. மஹாதந்த்ரத்தை தியானம் செய்தால் மந்த்ரராஜாவினுடைய அனுக்ரஹத்தாலே அந்த மந்த்ரம் (மலையிலக்காய் விளங்கி) உள்ளத்தைப் பிரகாசிக்கும் என்று சூக்ஷ்மாதிசூக்ஷ்மமாய்ச் சுட்டிக்காட்டின வித்தகச்சித்தர்கணத்துக்கு "நமோ நமஃ" என்று அனேக நமஸ்காரங்கள் செய்தேன்.

"அம்பரவாஸ சிதம்பரநாயக
தும்புருநாரத சேவிதசிவா."—

என்கிற கோஷம் காதில் விழவும், சிதம்பரத்துக்குப் போகவேண்டுமென்கிற எண்ணம் உதித்தது. வெள்ளியம்பலத்திலுள்ள "வித்தகச் சித்தர்கணத்தை" வணங்கி விடைபெற்றுக் கொண்டு வெள்ளியம்பலத்திலிருந்து பொன்னம்பலம் வரப்பார்த்தேன். வழிதெரியவில்லை. எங்கும் சித்தர்கணம்! எங்கும் சுயம்பிரகாசமான வெண்ணிலவொளி! யாரும் வழிகாட்ட இணங்கவில்லை. அப்பொழுது தும்புருநாரதரைத் தியானித்தேன். அவர்களில் நாரதர் உடனே தோன்றினர். அவரை வெள்ளியம்பலத்திலிருந்து பொன்னம்பலத்துக்கு வழிகாட்டவேணுமென்றுகேட்டேன். அவர்: "வழிகாட்டத் தடையில்லை. ஆனால் இங்கே வந்தவர்கள் திரும்புகிறது என்பதில்லை. அப்படித் திரும்புவதானால்துவாரபாலகர்களுக்கு பரமசிவனுடைய ஆஜ்ஞையிருக்கிறதுஎன்று ருஜுக்காட்ட வேண்டும்" என்றார். வெள்ளியம்பலத்தில் எல்லாம் சுயப்பிரகாசமாக விருக்க அதில் விழுங்கப்பட்டு, விபூதியன்றி வேறு "நான்" என்கிற அகந்தை மருந்துக்குமகப்படாத ஸ்திதியில் (நிர்குண வெளியில் நிர்மலாகாரமா யிருக்கையில்—என்றபடி,) பரமசிவன் எங்கே? அவர் ஆஜ்ஞையெங்கே? பிறகு அவருடைய அனுமதிச் சீட்டெங்கே? எனக்கொன்றும் தலைகால் புரியவில்லை. இந்த அவசரத்தில் யாரும் எனக்கு உதவி செய்வாரில்லை. இப்படி அம்பல வெளியில் அறிவழிந்து (தற்போதமழிந்து) நிற்கையில், வித்தகச்சித்தர்கணம்,—தும்புரு நாரதர்கள் சேர்ந்துபாட,

"ஆஹாரப்பிரிய ஆதிகிரீசுவர
போகாதிப்பிரிய பூர்ணசிவா"—

என்று சிவகோஷம் செய்தார்கள்.

அதைப்பிடித்துக் கொண்டேன். போகசிவனைத் தியானித்தேன்: அவர் கைலையங்கிரிவாசியாய் எதிரே வந்து நின்றார். அவர்தான் வந்தாரே! கைலையங்கிரியையும் கூட வேரோடு பிடுங்கிக்கொண்டு வந்து விட்டாரே! யென்று பரிதாபப்பட்டு, "சுவாமி! இந்த வெள்ளியம் பலத்தைவிட்டுப் பொன்னம்பலம் போகச் சீட்டுத்தரவேண்டுமென்று வாயில்லாவார்த்தையால் கேட்டேன். அவர் மஹாவிஷ்ணுவைச் சாட்டி விட்டார்.

"ராமேஸ்வராரண்யமுகாம்புஜ
ஸோமேஸ்வரஸூக்ருதசிவா"

என்று எல்லாரும் கரகோஷம் செய்து துதித்துக்குதித்தார்கள். உடனே மஹாவிஷ்ணுவானவர் ஸ்ரீராமச்சந்திர மூர்த்தியாக வந்து முன்னின்றார். அவரையு மப்படியே வரங்கேட்டேன். வரங்கேட்டு வாய்மூடுமுன் "உன்வாயடைக்க!" வென்றார். பக்கத்திலிருந்த லக்ஷ்மி நாராயணனைப் பார்த்தேன். "உன்வாய் திறக்க! (வாக்கு இன்னும் விஸ்தாரமாக"!) வென்றார். அந்தவரனையும்பெற்றுக்கொண்டு, பகவான் நாரதரைப்பார்த்தேன்! "அப்பா! இந்த இடத்தை விட்டுப்போக வேண்டுமென்கிற எண்ணம் உனக்கு எப்படி உதித்ததோ!" என்று கேட்டார்.

"ஸ்வாமி! என்னுள்ளத்திலுள்ளே கண்ட தொன்றையே வெளியிலும் கண்டு கிருதார்த்தனானேன். அஹப்புறம்ஒத்தனுபவிப்பதல்லவோ அனுபவம். ஒன்றைவிட்டு ஒன்றைப்பற்றினால் அனுபவம் பூரணமாவதெப்படி?" யென்றேன்.

"ஸத்யம்! வா போவோம்"! என்றார்.

அவர் பின்தொடர்ந்தேன்: துவாரபாலகர்களே சீட்டெங்கேயென்றுகேட்டார்கள். ஒருவருக்கு "உன்வாயடைக்க!" என்பதைக்காட்டினர். மற்றொருவருக்கு "உன்வாய்திறக்க! (வாக்குஇன்னும் விஸ்தாரமாக"!) என்பதைக்காட்டினர். இருவரும் சரியென்று ஒப்புக்கொண்டு கபாடமிட்ட வாசலைத்திறந்தார்கள். திடீரென்று மஞ்சள் வெயில் எரித்தாற்போல், அந்த வாசல்வழியே கிரணங்கள் வீசி எங்கும் பொன்மயமாய்ப் பிரகாசித்தது. "அப்பா! பொன்னம்பலம் பார்த்தாயா!" என்றார் நாரதர்.

"ஸ்வாமி! பார்த்தேன்! பார்த்தேன்! கலிதீரக் கண்டகண்ணால் பின்னும் பார்த்தேன்!" என்று அவருக்கு நமஸ்காரம்செய்து துதித்தேன்.

"அப்பா! அம்பலவெளியிது! அம்பலத்தறையைக் காட்டுகிறேன் வா!" என்றார்.

உடனே அவர் கிரிசக்ரம் என்கிற ரதத்திலேறிக்கொண்டு என்னையும் அதிலழைத்தார். அதிலேறிக்கொண்டு ஒரு சுற்றுச் சுற்றிவரவும், சிதறிப்போன மந்தையாட்டைச் சேர்த்துப் பட்டியிலடைக்கும் இடையனைப்போல, எங்கும் பாவியிருந்த மஞ்சட்கிரணங்களையெல்லாம் சுற்றிப்பிடித்து மத்திய ஸ்தானத்தை நோக்கித் திருப்பினர். அவையெல்லாம் திரண்டு, செவ்வான மிட்டுக்கொண்டு, அருணோதய சூரியன்போல் ஒன்றுகூடி மண்டலாகாரமாய் ரோஜாவர்ணமாக விளங்கக்கண்டேன்.

"மித்ரஸ்ய சர்ஷணீ த்ரதঃ ச்ரவோ தேவஸ்ய
ஸாநஸிம், ஸத்யம் சித்ரச்ரவஸ்தமம்" *

என்னும் வேதரிக்கினால் பிராஹ்மணர்கள் தினந்தோறும் காலையில் துதிக்கும் ஜகத்காரணனான ஸ்ரீமந் நாராயணன், சூரியநாராயணனாக விளங்கும் வைபவத்தைப்பார்!" என்று நாரதர் "ஸஹஸ்ரகோடிஸத்ரசாம்" † அந்த "உத்யத்பானு"வைக் காட்டினர்.

பிறகு இருவருமாய் அச்சூரியமண்டலத்திற் பிரவேசித்தோம். அது முன்போல பச்சைவர்ணமான கிரணங்களாகமாறி வெளியெங்கும் பரவிப் பின்னர் ஒன்றுகூடி நீலாகாரமான சந்திரமண்டலமாக விளங்கியது.

அந்தச் சந்திரமண்டலத்தில் பிரவேசிக்கவும் அது கருநீலமாக விரிந்து கறுப்புவர்ணமாகிக் குவிந்து ஸ்வர்க்க மத்ய பாதாளம் என்கிற மூவுலகையும் தன்னிலடக்கிய பூமண்டலமாயிற்று.

இந்தப்பூமண்டலத்திலே விசுவரூபதரிசனம் செய்துகொண்டு நாரதபகவானை வணங்கித்துதித்து விடைபெற்றுக்கொண்டு இந்த எண்சாணுடம்பிற் புகுந்தேன். புகவும் ஆகாசவாணி,

"உள்ளம் பெருங்கோவில் ஊனுடம்பாலயம்
கள்ளப்பிரானார்க்கு வாய் கோபுரவாசல்"—

என்கிற திருமந்திரத்தை யுபதேசிக்கக்கேட்டேன். "ஸத்யம் ஸத்யம் புனர்ஸத்யம்" என்று அதன் உண்மையைக் கண்கூடாகக் கண்டுகொண்டு, முன் செய்த லயயோகாப்பியாஸ சித்தியால் ஜீரணமான இத்தேஹத்தைப் பழனியாண்டவர் அநுக்ரகத்தால் ஜீரணோத்தாரணம் செய்ய வெண்ணினேன். எண்ணவும், எண்ணினபடி ஜீரணோத்தாரணஞ்செய்ய பஞ்சக்ருத்யபாரிருத்த மூர்த்தியான ஆனந்தநடேசன் அருள்புரியலானான். இப்படியாக அவனருள்பெற்று இத்தேஹத்தை இடித்துக் கோவிலாகக் கட்டி வருங்காலத்தில், ஆகாசத்திலிருந்து

"உன்வாயடைக்க!" என்றும்,
"உன்வாய் திறக்க!" என்றும்,

இரண்டு தெய்வவாக்குப் பிறந்தது. இதற்கு அர்த்தம் என்னவோ அதை இதைவாசிப்போர் அவரவர்கள் மனோபாவம்போல் திரியத்திரித்துத் தெரிந்து கொள்ளலாம். இங்கே, வேதாரண்யத்திலுள்ள கோயிலின் கதவடைபட்டிருந்ததும், அதை அப்பர் சுவாமிகள் தேவாரம் பாடித் திறக்க, ஞானசம்பந்தர் தேவாரம் பாடியதை யடைக்கலானாரென்னும் ஐதிகம் விசாரித் துணரத் தக்கதாக ஞாபகத்துக்கு வருகிறது. வேதாரண்யத்தில் இத்தருணம் கும்பாபிஷேகமும் ஒன்று நடந்ததாகக் கேள்விப்பட்டுக் குதூஹலமடைந்தேன். "கோவில்கட்டிக் கும்பாபிஷேகம் செய்யவேண்டும்." பிறகு, "மூடினகதவைத்திறந்து, திறந்தகதவை மூடல் வேண்டும்." அப்பொழுதுதான் ஆடின உருவம் தேடின அருவமாகி அருவுரு வாகியும் உருவருவாகியும் உலகோர் உய்யவிளங்கும். ஓம்தத்ஸத்.

போக சிவனைக் காணவேண்டின யான் வெள்ளியம்பலம் விட்டுப் பூமண்டலத்திற்கு

* ["பிரஜைகளைப் போஷிக்கும் தேவதையாகிய ஸூர்யனுடைய உண்மையானதும் நன்றாக அடையக்கூடியதும் மிகவும் ஆச்சரியமாகக் கேட்கப்படுவதுமான கீர்த்தியை ஸ்துதிசெய்கிறேன்" என்பது இதன் பதப்பொருள்.]

† ஆயிரம்கோடி சூரியப்ரகாசத்தோகூடிய.

வந்தேன் என்று சொன்னேனல்லவா! வந்தபின் கண்டது கனவோ நனவோ என்று பார்த்துக்கொண்டேன். கனவுமில்லை! நனவுமில்லை.—கனவு நனவழிந்ததோர் துரியமுமில்லை. பின்னை? கனவொடு நனவு சுஷுப்தி மூன்றிலும் குரலொடு சுருதி கூடினாற்போலவே, வியாபித்து நிற்குமோர் உயர் துரியத்தின் அதீதமென்றே யறிந்தனன் உள்ளே. அஃதையே துரியாதீதமென்று செப்புவர் மேலோர். 'சகஜநிலை'யென்பதும் அஃதேயாகும். இப்படியிருக்கும் அவஸ்தை நேர்ந்ததோர் "அவஸ்தாதீதமாம் அவஸ்தை தன்னில்" ஸ்ரீ பழனி ஆண்டவர் சந்நிதானத்திலிருந்து "விபூதிப்ரஸாதம்" விளம்பரத்துடன்வர, அஃதினை யேந்திநான் ஆர்வமுடன் தரிக்க அக்ஷரமாம் முத்திரையில் அதன்கண்ணே விளங்கிய வோர் அற்புதமாம் நிஜபதத்தை அருமையுடன் 'நான்' கண்டேன். கண்டதைக் கண்டபடிக் குறிப்பிடக் கீழே ஆண்டவனடிமையா யுடன்பட்டேன் ஆஜ்ஞையினால். ஆண்டவன் அனுப்பிய ஆசீர்வசனமும் இதுவாம்:—

"இப்பிரபஞ்சத்தின்கண் நெடுங்காலம்வரை தீர்க்காயுளுடனிருந்து விவேகசிந்தாமணி யெனும் பெண்ணரசிமூலமாக சமஸ்தமான ஜனங்களுக்கும் லௌகீக வைதீக விஷயங்களை எடுத்துப் போதித்து, எல்லோரையும் இகபர புருஷார்த்த சித்திகளைப் பெற்றுய்யும்படி செய்யவேண்டிய பக்குவங்களுடன் அவதரித்திருக்கின்ற புண்யதேஹியாகிய நின்றனக்கு எவ்வித ஆபத்துகள் வந்தாலுங்கூட சூரியனைக் கண்ட பனிபோல் ஒரிமைப்பொழுதில் பறந்து விடுமென்பதற்குச் சந்தேகமில்லை.' "கோறிய காரியங்கள் நிறைவேறும்படி ஸர்வலோக சரண்யனன பகவான் அநுக்ரகம் செய்வாரென்பது திண்ணம்."-அதாவது, "ஆத்மஸங்கல்பம் எப்போதும் இடையூறின்றி நிறைவேறுமென்பது திண்ணம்."— என்றபடி.

ஓம் சரவணபவநமோநம:

---

## திருநெல்வேலி மோசக் கொலை.

(:-o-:)

சென்ற ஜூன்மீ 17உ சனிக்கிழமையதினம் திருநெல்வேலி ஜில்லா கலெக்டர் மிஸ்டர் ஆஷியென்பவர் ஒரு மாச ரஜாவின்பேரில் கொடைக்கானலிலிருக்கும் தனது புத்திரர்களைப் பார்க்க வேண்டி மனைவி சகிதமாய்ப் போய்க்கொண்டிருக்கையில் மணியாச்சி ஸ்டேஷனில் ஒரு பாதகன் அவரைச் சுட்டுக் கொன்றுவிட்டான். உடனே அவனும் ஸ்டேஷன் கக்கூசுக்குள் ஓடி யொளிந்துகொண்டு அதற்குள் தானே தன்னைச் சுட்டுக்கொண்டு மாண்டுவிட்டான். அதைப்பற்றி வேண்டிய விசாரணைகள் நடந்து வருகின்றன. இந்த மஹாபாதகம் செய்தவன் ஒரு உயிரை வாங்கினதன்றி தன்னுயிரையும் மாய்த்துக்கொண்டு யமலோகம் போய்விட்டபடியால், அங்கே தர்மராஜா முன்னிலையில் அன்னவன் தன் கர்மத்துக்குத்தக்க தண்டனை யடைவானென்பதிற் சந்தேகமில்லை. ஆனால் இப்படி நடக்கும் கொலைபாதகங்களால் தேசத்தின் நல்லபேர் கெட்டுப் போகிறது. 'குலத்தைக் கெடுத்தது கோடரிக் காம்பு' என்றது போல், சில துராத்மாக்களின் துஷ்கிருத்தியத்தால் தேசத்தின் நல்லபேர் கெட்டுப்போகிறது! இதுவும் ஓர் கொடுமைதான்! திடீரென்று காலஞ்சென்றவருடைய மனைவி மக்களிடத்து நடக்குண்டாகும் அனுதாபத்துக்கு அளவில்லை. திக்கற்றவருக்கு தெய்வமேதுணை யாதலால், அந்த அம்மாளுக்கும் குழந்தைகளுக்கும் பகவான்தான் மனோதைரியத்தைக் கொடுத்து ஆறுதலை யுண்டுபண்ணவேண்டும். மனுஷன் துயருற்றவரோடு துயரப்படலாம். பகவான் ஒருவரே தீனதயாளு! அவர்தான் தீனரைத் தேற்றவும் ஆற்றவும் வல்லவர். எல்லாம் வல்ல கடவுள் அநாதரக்ஷகராதலால் திடீரென்று ஆறாத்துயரிலாழ்ந்த அவர் குடும்பத்தார் மனதை யருள்நோக்கால் ஆற்றுவாரென்று ஸர்வலோக சரண்யனைத் தியானித்துப் பிரார்த்திக்கிறோம்.

—:-:—

